நிற்கும். சம்பவகாண்டத்தின் ௬௪-ம் அத்தியாயத்தில் ௪, ௫ - தொடக்கமாக வரு சுலோகங்களில்—

> "(குமாரன்) மகாதேவரது தோண்மீதேறியிருந்தனன்: அக்கால் மகாதேவர் அளவற்ற ஆனந்தசுவரூபியாயினுந் தம்முடைய உத்தமபுத்திரனாகிய ஆனந்தக்கடலின் திருமேனி பரிசித்தலாய அளப்பறும் அமிர்த சலத்திடை அமிழ்ந்திட்டனர்"

எனவருந் திவ்விய சரித்திரமானது, உலகிலுள்ள பிதாக்களெல்லாம் பிள்ளைகண்மாட்டு வைக்கும் பேரன்பாய தருமத்தையும், அதில் விளையுஞ் சுகத்தையும் இனிதுணர்த்தாநிற்கும். இது நிற்க. அக்கண்ணுதற் பரமனுருங் கல்லாலின்கீழ் யோகிருந்தனர். அவர் யாது பயன் கருதி அவ்வாறிருந்தன ரென்னலாம்? சனகாதி முனிவர்கட்கு அதனை யுணர்த்து நிமித்தமும், அதனாற் றுறவற யோகவாழ்க்கையொன்று உலகிலே தெவுளு நிமித்தமுமாக அந்த யோகிருந்தனரெனக் கருத்துளர் கரிசறத் தெளிவரன்றோ. அன்ப! இவைபோல்வனவெல்லாம் சுவப்பிரயோசன மல்லாத பரப்பிரயோசன மென்றறி.

(எ௪)

சீட.—பரமசிவனுருரைத்த வேதப்பொருளைப் பராமுகமாக விருந்து கேட்ட தேவியாரை அச்சிவனார் "நீ பரதவர் மகளாகுக" எனச் சபித்ததைப் பொருத விநாயகர், இவைகளினாலன்றோ தீங்கு விளைந்ததென்று அவனிருந்த புத்தகங்களை வாரிக் கடலில் வீசுவது கண்ட கந்தசுவாமியும் பரமசிவனது கரத்திருந்த போதநூலைப் பறித்துப் பௌவத்தில் வீசிய நிமித்தம் அம்முருகவேளைச் சிவனார் நோக்குப "நீ வணிகர் குலத்தின் மூங்கைப்